# நாட்டார் பாடல்களில் பாண்டித்தியம்

~~~~~~~~

வட்டுக்கோட்டை,
மு. இராமலிங்கம்
(மக்கள் கவிமணி)

1971

சக்தி அச்சகம்
ஸ்ரான்லி வீதி, — யாழ்ப்பாணம்.
~~~~~~~~

நயம்பெறு நாட்டார் பாடல்கள் கொண்ட இவ்வெளியீடு, ஈழநாட்டில் மதத்திற்கும், மொழிக்கும், மக்களுயர்வுக்கும் உழைத்துப் புகழ்பெற்ற (கொழும்பு) வழக்கறிஞர்

**சு. சிவசுப்பிரமணியம்**

அவர்களின் நன்கொடைப் பண உதவி கொண்டு வருகின்றது. இவ் வள்ளல், — உடுவில் அம்பலவாண முதலியார் மகன், உடுப்பிட்டி அருளம்பல முதலியார் மகன், கோப்பாய் அம்பலவாண முதலியார் பேரன் என்னும் — பெரும் பரம்பரையினர் ஆவர்.

# நாட்டார் பாடல்களில் பாண்டித்தியம்

உலகெங்கும் பேச்சுப் பாஷை வேறு, எழுத்துப் பாஷை வேறு. எழுத்துப் பாஷையிலும் செய்யுள் இலக்கணம் கற்றாருடைய வசன நடைவேறு, செய்யுள் இலக்கணம் கல்லாதாருடைய வசன நடை வேறு. செய்யுள் இலக்கணம் கற்றாருடைய வசன நடையில் செய்யுள் இலக்கணம் அமைந்த வசனங்களும் அவர் அறியாமல் வந்து விடும்.

நாட்டார் பாடல்களிலும் நாவன்மையுடையார் பாடல்களில் வழுவற்ற செய்யுள் இலக்கணங்களுங் கூட இயல்பாகவே வந்து விடும். நாட்டார் பாடல்களில் நாம் செய்யுள் இலக்கணம் பார்த்தலாகாது. ஓசைநயம், பொருளின் போக்கு புலவர்களின் பாக்களில் தொனிப்பது போலத் தொனிக்கும். மேலும் நாட்டார் பாடல்கள் பேசும் பாஷையில் அமைவதனால் கவர்ச்சி அவற்றில் அதிகம்.

எதுகை, மோனை, அடுக்கு என்னும் இவை நாட்டார் பாடல்களில் காணப்படும் நயங்களாம்.

வித்தாரக் கள்ளி
விறகெடுக்கப் போனாளாம்
கத்தாழை முள்ளு
கொத்தோடே குத்தினதாம்

என்ற வசவிலும்

கெட்டார் தழையாரோ
கேடொருகால் நீங்காதோ
வெட்டின கட்டையிலே
வேரோ தழையாதோ

என்ற பிரலாபத்திலும்

நண்டு நறுநறுக்க
நாய்ப்பெரியார் ஊளையிட
பெண்டு பிறுபிறுக்கப்
பேய்ப்பெரியார் ஊளையிட

என்ற பரிகாசத்திலும் கூட எதுகையும் மோனையும் இருக்கின்றன.

எதுகைச் சிறப்புடைய எத்தனையோ தொடர்கள் பேச்சு வழக்கில் உண்டு. ஆடல் பாடல், ஆதாள பாதாளம், உண்பனவு தின்பனவு, எண்ணெய் தண்ணி, வம்பு தும்பு, வாழ்வு தாழ்வு என்பன உதாரணங்கள்.

பேச்சு வழக்கில் மோனை நயம் அமைந்த தொடர்களுக்கும் குறைவில்லை. அக்கை ஆத்தை, ஏழை எளியது, காடு கரம்பை, சோலி சுறட்டு, பொங்கல் பூசை, வருத்தம் வாதை என்பன உதாரணங்கள்.

## பழமொழிகள்

இப்படி ஆற்றெழுக்காக வழங்கும் எதுகை மோனைகள் பழமொழிகளிலும் சிறப்பாக அமைந்திருக்கின்றன. எதுகை அமைந்திருக்கும் பழமொழிகள் சில பின்வருமாறு.

அடியாத பிள்ளை படியாது
ஒடியாத முருங்கை காயாது

அவசாரியானாலும்
முகராசி வேண்டும்

ஆசாரி விடைகொடுத்தாலும்
பூசாரி விடைகொடான்

கண்டவன் விலை சொன்னால்
கொண்டவன் கோடி உடான்

கள்ளுக்கொள்ளா வயிறுமில்லை
முள்ளுக் கொள்ளா வேலியுமில்லை

சிரிச்சுக் கெட்டது பொம்பிளை
விரிச்சுக் கெட்டது போயிலை

அப்படியே மோனை அமைந்திருக்கும் பழமொழிகள் சில வருவது காண்க.

இல்லாதார் பொன் பூண்டால்
''எங்காலே எங்காலே''

எளியவனாய்ப் பிறந்தாலும்
இளையவனாய்ப் பிறவாதே

கூத்துக்காரன் கிழக்கே பார்ப்பான்
கூலிக்காரன் மேற்கே பார்ப்பான்

கொண்டானுங் கொடுத்தானுங் கூடக் கூடக்
கொட்டி வந்த பறையன் தூரத் தூர

பனையின் இணலும் இணலோ
பகைவர் உறவும் உறவோ
வேலி இணலும் இணலோ
வேசை உறவும் உறவோ?

பாலாயூட்டிப் பழமாய்ச் சொரிந்தாலும்
பாவியென்ன தந்தாள் பாவக்காயுஞ் சோறுந் தந்தாள்

எதுகையும் மோனையும் அமைந்திருக்கும் பழமொழிகளும் உள.

பெரிய வீடென்று
பிச்சைக்குப் போனேன்
கரியை வழித்துக்
கன்னத்தில் தடவினர்கள்

வாயாலே கேட்டால்
வாழைநாருங் கொடான்
தாயடை புரியன் வந்து
தாரேடே கொண்டு போருன்

சேலேமேல் சேலேகட்டி
தேவரம்பை ஆடினுலும்
ஓலேமேல் எழுத்தாணி
ஊன்றும் பெண் ஆகாது.

## விடுகதைகள்

மாடு மேய்க்கும் பையன்கள் இன்பங்காணும் விடுகதை (நொடி) களிலும் எதுகையும் மோனையும் அநேகமாய் அமைந்திருத்தலேக் காணலாம்.

மூக்கு மூன்றுண்டு
முகத்தாறு கண்ணுண்டு
நாக்கு நான்குண்டு
நடக்குங்கால் பத்துண்டு

[விடை: உழவன், மாடுகள், கலப்பை.]

நீரோடி நிலங்குளிர்ந்து
நிலத்து வாழை குருத்தெறிந்து
காரோடிய மணலில்
கருவில்லா முட்டையெது?

[விடை: காளான்.]

சுத்துவேன் அந்த மரத்தை
சூடேன் அந்தப் பூவை
நத்தேன் அந்தக் காயை
நாடுவேன் அந்தப் பழத்தை

[விடை: வேம்பும் காகமும்]

## தாலாட்டுப் பாடல்கள்

எதுகைக்கு இடர்ப்படாமலும், மோனைக்கு முக்கி முனகாமலும், ஏடு அறியாத, எழுத்தாணி தெரியாத, பெண்களும், கவிதை வெள்ளம் கரைபுரண்டு ஓடும்படி, தாலாட்டுப் பாடல்களை உரு வாக்கி விடுகின்றனர்.

கொம்புக் கனியே
கோதுபடா மாங்கனியே
வம்புக் கழுகிறீரோ
வாயெல்லாந் தேனூற

காய்ச்சின பாலுக்கோ
கடைஞ்செடுத்த வெண்ணெய்க்கோ
தோய்த்த தயிருக்கோ
சொல்லியழு கண்ணனே

நித்திரைசெய் நித்திரைசெய்
நெடியபுவி மன்னவனே
சித்திரப்பூந் தொட்டிலிலே
சிகாமணியே கண்ணுறங்கு

அழுதால் முலையும் உண்ணான்
அந்திபட்டால் பள்ளிகொள்ளான்
தொழுது முலை கொடடி
தோகையரே கண்மணிக்கு

## ஒப்பாரிப் பாடல்கள்

"இழவில் அழுதிடும் பெண்கூட இசையோடழுவது கண்கூடு" என்பர் நாமக்கல் இராமலிங்கனார். ஒப்பாரிப் பாடல்களிலும் எது கையும் மோனையும் அநேகமாய் அமைந்திருத்தல் கண்கூடு.

தேங்காய்ப்பாற் கஞ்சியிலே - உனக்குத்
தியங்கமருந் திட்டினமோ
மாங்காய்ப் புளிச்சாற்றிலே - உனக்கு
மயங்கமருந் திட்டினமோ

அரைத்த மருந்தோ - இங்கே
அம்மிபாழ் போகுதெணை;
உரைத்த மருந்தோ - இங்கே
உருக்குலைந்து போகுதெணை

மணவறைப் பந்தலிலே - உன்
மணக்கோலம் பாராமல்
பிணவறைப் பந்தலிலே – நானும்
பேரிழவோ கொள்ளுகிறேன்

## சிறுவர் பாடல்கள்

குழந்தைகள் விளையாடும்போது பாடும் பாடல்களிலே பொருட் பொதிவு இல்லாவிட்டாலும் ஒலிக்குறிப்பு ஓசை நயத்தை எழுப் புவதனைக் காண்பீர். நகைச்சுவையும் இவற்றில் உண்டு.

சின்னப்பெண்ணே அம்மிணி முத்து
தண்ணிக்குப் போறவளே
தண்ணிக்குடத்தை தொம்மெனப் போட்டு
என்னிலே பழியைச் சாட்டாதே

அம்மான்ரை சின்னப்பெட்டை வாடி வா,
அழகான மாப்பிளையும் நான் தாண்டி;
ஊரரிசிச் சோறுமடி , வாடிவா ,
உசிரோடே மீனுமடி , வாடிவா

காக்காய்க் குஞ்சுக்குக் கலியாணம்
காசுக்கு இரண்டு பணியாரம்
ஓட்டுக்கு மேலே சீதனமாம்
ஓடி வாருர் மாப்பிள்ளை
கஞ்சி காய்ச்சடி குஞ்சி
கறணம் போடடி சிங்கி
வந்த மாப்பிளை நொண்டி
வாசலைச் சாத்தடி தெண்டி

## பாடல்கள் உருவாவ தெவ்விதம்?

என் வளவையும் என் தம்பியார் வளவையும் பிரிப்பது ஒரு வேலி. அவர்கள் எங்கள் வீட்டுக்கு வரவும் நாங்கள் அவர்கள் வீட்டுக்குப் போகவும் அவ்வேலியிலே ஒரு கடவை உண்டு. ஒரு கொய்யாமரம் என் வளவில் காய்த்துப் பழுத்துக் குலுங்கியது.



ஐந்துவயதும் நிரம்பப்பெருத எனது பெருமகன் ஜெயநாத னுக்கு அந்தப் பழங்களில் ஒரு கண், களவாகக் கடவையால் உட்புகுந்து "ஐயா! கொய் யாக்காய்'' என்று கொண்டே வருவான். பெரிய ஐயா என் னுஞ் சொற்றெடர் அவன் வாயில் "ஐயா'' எனச் சுருங் கியது.

கொய்யாக் கனிகளை உண்ண உண்ண ஜெயநாத னுக்குக் கொள்ளிக் கரப்பன் உடம்பெல்லாம் அள்ளி வீசி யது. ''ஐயா வீட்டுக்குப் போகவும் கூடாது கொய் யாப் பழங்கள் தின்னவும் கூடாது'' என்பது அவன் தாயாரின் கட்டளை. கொய் யாப்பழங்களைத் தானுகத் தமையன் தமக்கைமார்க்குக் கொடுப் பான். நானே என் மனையாளோ அவர்களுக்குக் கொடுக்கக் கூடாது.

ஒரு நாள் அவனுக்கு நேரே மூத்த சகோதரியைக் கூப்பிட் டேன். அவனே முன் வந்தான். ''சின்னக்காவைக் கூப்பிட்டேன்'' என்றேன். ''ஏன்'' என்ருன். "வேணும்'' என்றேன். ''ஏன் சொல்லுங்கோ'' என்ருன். ''இல்லை, அவளே வேணும்'' என் றேன். அவன் மனத்தில் திடீரென எழுந்த உணர்ச்சி

ஐயாப் பிள்ளை
எனக்குத் தெரியும்
கொய்யாப் பழங்கள்
கொடுக்கப் போறீர்

என்னுங் கவியாக மலர்ந்து வெளிவந்தது. சிறியோர் வாயி லும் பெரியோர் வாயிலும் பாடல்கள் இப்படியே உருவாகின்றன. இப் பாடலில் எதுகையும் மோனையும் அமைந்திருப்பது காண்க.

## நாடோடும் நயமோடும்

பாடல்கள் ஊருக்கூர் ஓடுவதில் வேறுபடும் என்பது நாட் டார் பாடற்கலை இலக்கணம். அவை உருக்குலையலாம் சிறக்க லாம்.

தஞ்சை, சரஸ்வதி மகால் வெளியீடு, திரு : கி : வா: ஜகந் நாதன் அவர்கள் பதிப்பு, 1958, மலையருவி என்னும் நூலில் (பக்.7) தரப்பட்டுள்ள ஒரு பாடல் வருமாறு.

கூடி இருந்த இடம் - குட்டி
கும்மாளம் போட்ட இடம்
வாழைப்பழம் தின்ற இடம் - குட்டி
பாழாய்க் கிடக்குதடி

தமிழர் நாட்டுப் பாடல்கள், (திரு . நா : வானமாமலை அவர் கள் தொகுப்பு, 1964) என்னும் நூலில்(பக்.186) தரப்பட்டுள்ள பாடம் இது.

கூடி இருந்த இடம்
கும்மச்சரம் போட்ட இடம்
வாழப்பழம் தின்ன இடம்
பாழாக் கிடக்குது பார்

இலங்கையில் எனக்குக் கிடைத்த பாடத்தையும் இதன் கீழ்த் தருகின்றேன்.

கூடி இருந்த இடம்
கும்மாளம் போட்ட இடம்
பாடி மகிழ்ந்த இடம்
பாழாய்க் கிடக்குதடி

பிந்திய பாடத்தில் எதுகை மோனை பொருட்பொலிவு யாவும் சிறப்புற அமைந்திருக்கக் காணலாம். இதுவே பாடலின் பூர்வ பாடம் என்பது தெளிவு.

## வினவும் விடையும்

ஆண்களும் பெண்களும் எடுத்தவுடன் சொல் நயம் பொருள் நயம் அமைய எதிர்த்தோ தொடர்ந்தோ பாடுஞ்சக்தி நாட்டு மக்களுக்கு உண்டு. இத்தகைய பாடல்களைச் சோடிக் கவிகள், வாது கவிகள், போட்டா போட்டிப் பாடல்கள், எதிர்ப் பாட்டுக்கள் என்பர். சமயோசிதமாக இப்படிப் பாடும் பாடல்களிலும் எதுகை மோனை அநேகமாய் அமைந்தேயிருக்கும்.

கன்னி :- சாலைவழி போற மச்சான்
சவுக்குமரம் போலேநீ
வேலையின்றி ஏன் என்னை
வீணுகச் சுத்துகிருய்?

காளை :- ஆலையிலே வேலைசெய்து
அலுத்து வரும் அத்தைமகள்
சேலைநிறங் கண்டுவிட்டுத்
திரும்பிவிட்டேன் சாலைவழி.

சவுக்கு மரம் உயரத்துக்கும் மக்களுக்கு உதவா விருட்சத்துக்கும் உவமை. சவுக்கு மரத்திற்கு நிழலரிது. கன்னியின் சுடுசொல்லைக் காளை பொருட்படுத்தவில்லை. "நீ என் அத்தை மகள். ஆலையில் வேலை செய்து களைத்து வருகிறாய். உன் ஆயாசந்தீர உன்னுடன் நான் கூடப் பேசிக்கொண்டு வருவதில் என்ன குற்றம்" என்கிறான் காரியத்தில் கண்ணுயிருக்கும் காளை.

இன்னுமொரு காளை எழுப்பிய வினாவுக்கு வேறொரு கன்னி இறுத்த விடையையும் இதன் கீழ்த் தருகின்றேன்.

காளை :- அறப்பழுத்த நாவலின் கீழ்
சிவப்புடுத்துப் போறபிள்ளாய் - உன்
முலைக்கறுப்பைக் கண்டல்லவோ
மோகமய லானேனடி

கன்னி :- அறப்பழுக்க வில்லையடா
அண்ணன்மார் காவலடா
ஏர்ப்பூட்ட வில்லையடா
இன்னுமிளங் கொங்கைகளில்

தனக்கு இன்னுந் திருமணமாகவில்லை என்ற பொருளும், அதனைத் தெரிவிக்கும் சொல் நயமும், கன்னியின் பதிலில் சிறப்பாக அமைந்திருக்கின்றன.

## இகழா இகழ்ச்சி

பிறப்பாலோ பொருளாலோ உயர்ந்த இந்தியன் ஒருவன் தனதூரில் பிறப்பாலோ பொருளாலோ தாழ்ந்த பெண் ஒருத்தியை இலங்கையில் சந்திக்கிறான். உரிய முறையில் அவனை அவள் மதிக்கவில்லை. இந்தச் சூழ்நிலையை மனத்திலிருத்திப் பின்வரும் பாடலைப் படித்துப் பாருங்கள்.

கண்டிக்கு வந்ததுன்னு
கனத்தநகை போட்டதுன்னு
மஞ்சள் குளித்ததுன்னு
மனுசமக்க தெரியலியே.

"கண்டிக்கும் வரக்கூடியவர்களா நீங்கள்? வந்து விட்டீர்கள். பொருளும் சம்பாதித்து விட்டீர்கள். சாத்துப்படி போல் நகைகள் சாத்திக் கொண்டீர்கள். மஞ்சளறியா நீங்கள் இங்கே மஞ்சள் குளிக்கிறீர்கள். அதனால் உங்களுக்கு மக்களை மதித்து நடக்கத் தெரியவில்லை." என்பது சீமான் எண்ணம்.

இந்த இகழா இகழ்ச்சி அவளை எப்பாடு படுத்தியிருக்கும்!

# ஒரே பாடலுக்கு மாற்றம் பல

சந்தர்ப்பங்களுக்கு ஏற்றவாறு நாட்டில் வழங்கி வரும் பாடல்களின் சொற்களையோ, சொற்றொடர்களையோ, அடிகளையோ மாற்றியும் தழுவியும் புதிதாகப் பெய்தும் பாடுவதில் நாட்டு மக்களுக்கு நிகர் நாட்டு மக்களே.

ஐந்து பிரதேசங்கள். இந்தியாவில் மூன்று. இலங்கையில் இரண்டு. ஒவ்வொன்றிலும் மூன்று இடங்கள் ஏற்றத்தாலும் இறக்கத்தாலும் தூரத்தாலும் ஒற்றுமையுள்ளனவாய் இருந்தன. பின் வரும் பாடல்கள் அப்பிரதேசங்களை எமக்குச் சுட்டிக் காட்டுகின்றன.

ஏத்தமடி கம்பமெட்டு
இறக்கமடி களிமேடு
தூரமடி கோகிலாபுரம்
தொடர்ந்துவாடி நடந்துபார்ப்போம்

ஏத்தமடி கோட்டமலை
இறக்கமடி சடையாறு
தூரமடி நம்காடு
தொடர்ந்துவாடி நடந்துபோவோம்

ஏத்தமடி கல்மருத
இறக்கமடி மீனுக்கொல்லை
தூரமில்லை அரிசிச்சாப்பு
தொடர்ந்துவாடி நடந்துபோவோம்

இவை மூன்றும் இந்தியப் பாடல்கள். இனிவருவன இலங்கைப் பாடல்கள்.

ஏத்தமடி பெத்துராசி
எறக்கமடி கொட்டியாகலை
தூரமடி தொப்பிதோட்டம்
தொடர்ந்துவாடி நடந்துபார்ப்போம்

ஏத்தமடி நூரெலியா
எறக்கமடி ராதாளை
தூரமில்லை நானுஓயா
தொடர்ந்துவாடி நடந்துபோவோம்.

வாய் மொழியாகவேயன்றி எழுத்துருவில் நாட்டார் பாடல்கள் இதற்குமுன் வெளிவராதபடியாலும், ஓசையின்பமே நாட்டார் பாடல்களுக்குரிய முக்கிய இலட்சணங்களுள் ஒன்றாகையாலும், அவ் வோசையின்பங் கெடாத எந்தச் சொல்லையோ சொற்

றுடரையோ அடியையோ நாட்டார் பாடல்கள் ஏற்று வந்தன; அவற்றுக்கு மேலேதந்துள்ளனவும் இதன்கீழ்த் தருவனவும் உதாரணங்கள்.

மானத்திலே மழையுமில்லே
மழைபொழியக் கானலில்லே
முட்டிகளைத் தூக்குங்கடி
முல்லேயாறு போயிச்சேர

மானத்திலே மேகமில்லே
மழைபொழிய நாளுமில்லே
கூடவந்து சேர்ந்தியின்ஞ
குடிமங்கலம் விடியப்போவோம்

மானத்திலே மழையுமில்லே
மழைபொழியக் காலமில்லே
கூடிமாடிப் பேசுங்கடி — நாம
கொழும்புச்சீமை போய்ப்பிழைப்போம்

எத்துணை மாற்றங்கள் செய்தபோதும் நாட்டார் பாடல்களில் மோனை அமைந்தேயிருக்கும்.

## ஒரு பொருட் பல பாடல்கள்

களவில் இன்பந் துய்த்து வந்தனர் காதலன் காதலி. ஊரில் அவர் பரவியது. அவர்கள் ஒருவரை யொருவர் மேலும் சந்தித்துக் கொள்ளாவாறு மேற்பார்வை செய்தனர் பெற்ருேர். காவலேயுங் கடந்து சொற்பநேரம் சந்திக்கின்றனர் காதலன் காதலி. பிரிவால் ஏற்பட்ட சோகத்தைச் சித்தரிப்பது பின்வரும் பாடல்கள்.

ஆல மரமுறங்க
அடிமரத்து வண்டுறங்க
உன்மடிமேல் நானுறங்க
உலகம் பொறுக்கலேயே
[நாலாம்வரி, 'என்ன தவஞ் செய்தேனடி' என்றும் பாடம்.]

ஆல மரமுறங்க
அடிமரத்து வண்டுறங்க
ஊரு உறங்காதோ
உன்மடிமேல் நானுறங்க
[நாலாம்வரி, 'உங்கமடி நானுறங்க' என்றும் பாடம்.]

ஆலில் கிளிதூங்க
அடிமரத்தில் தேன்தூங்க
உன்மார்பில் நான்தூங்க
உலகம் பொறுக்குதில்லே

[இரண்டாம்வரி, 'அந்தரத்தில் தேன் தூங்க' என்றும் பாடம்.]

கல்லோட கல்லுரச
கடலுத்தண்ணி மீனுரச
உன்னோட நானுரச
உலகம் பொறுக்கலேயே

[நாலாம்வரி, 'என்ன வரம் பெற்று வந்தேன்' என்றும் பாடம்.]

கல்லோடு கல்லணைய
கடலோடு மீனணைய
உன்னோடு நானணைய
உலகம் பொறுக்குதில்லே

[இரண்டாம்வரி, 'கடலோடு திடலணைய' என்றும் பாடம்.]

கொப்போடு கிளியணைய
குளத்தோடு மீனணைய
உன்னோடு நானணைய
உலகம் பொறுக்குதில்லே

தமிழ்ப் பேசும் நல்லுலகத்தின் பல பாகங்களிலுமிருந்து எழுந்தவை இப்பாடல்கள். ஆகவே ஒரே பொருளில் பல பாடல்கள் வழங்கி வருவது ஆச்சரியமன்று.

## ஓரடிப் பாடல்கள்

ஒரு பெண் ஏதோ குற்றிக்கொண்டு நிற்கிறாள். அவள் காதலன் ஓரடிப் பாடலொன்றைப் பாடிக்கொண்டுவந்து அவள் கையைப் பிடிக்கிறான். யாராவது பார்த்துவிடப் போகிறார்களென்று அவள் பயப்படுகிறாள். அதனைச் சொல்லாது தன் கைவளையல்கள் நொறுங்கிப்போம் என்று அவளும் ஓரடிப் பாடலில் பதில்சொல்கிறாள்.

காதலன் :- வீதியிலே கல் உரலாம்
வீசி வீசிக் குத்துராளாம்
காதலி :- கையைப் புடிக்காதிங்க
கைவளையல் நொறுங்கிவிடும்

x x x x

ஏலமலேக்குப் போகிறேன் என்கிருன் ஒரு காதலன்? அங்குள்ள பெண்களில் மயங்கி என்னே மறந்து விடாதே என்கிருள் அவன் காதலி.

காதலன்:- ஏல மலேக்குப்போறேன்
ஏலப் பசுங்கிளியே

காதலி:- ஏலப்பூ வாடையிலே
என்னே மறந்திராதே

x x x x

ஆடு மாடு மேய்க்கும் தன் காதலன் அடைமழைக்கு எங்கிருந்தான் என்ற கவலே காதலிக்கு.

காதலி:- ஆட்டுக்காரா மாட்டுக்காரா
அடைமழைக்கு எங்கிருந்தே?

காதலன்:- மாரியம்மன் கோயிலுல
மண்டபத்து மேலிருந்தேன்

[''குறும்பன்கம் பிளிக்குள்ளே, குறுகிக்கிட்டு நான் இருந்தேன்'' என்றும் பாடம் உண்டு.]

x x x x

கூடை மேலே கூடை வைத்துக் கன்னி எங்கு செல்கிருள் எனக் காளே வினவுகின்ருன். அவள் பதிலில் பரிகாசம் தொனிக்கிறது.

காளே:- கூடைமேலே கூடைவைச்சு
குமரிப்புள்ளே எங்கேபோற?

கன்னி:- ஏழுமலே கழிச்சு - ஒரு
எளவட்டத்தைத் தேடிப்போறன்

['எங்கே போகிருய்?' என்ற கேள்வியைப் பொதுவாகப் பெண்கள் விரும்புவதில்லே. அப்படி யாராவது கேட்டு விட்டால் ''தேடி விழுவானுக்கு வாழப் போகிறேன்'' என்று நடுத்தர வயதிற்கு மேற்பட்ட பெண்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன்.]

x x x x

சுமங்கலி ஒருத்தியைக் கொஞ்சம் சுணங்கிப் போகச் சொல்கிருன் ஒரு விடபுருஷன். இயல்பாகவே பெண்களிடம் அமைந்துள்ள ஒரு தந்திரத்தைக் கையாண்டு தப்பிக் கொள்கிருள் அவள்.

பெண்:- தங்கினுலுந் தங்கவிடார்
என்கணவர் அண்ணே

ஆண்:- அண்ணேயண்ணே இன்னுதடி
அறிவுகெட்ட பெண்ணே;

செந்தமிழ் இலக்கியத்திலும் ஒருவர் பாதியும் இன்னொருவர் பாதியுமாகப் பாடிய பல செய்யுள்கள் காணப்படுகின்றன. ஒட்டக் கூத்தரும் புகழேந்தியாரும், கம்பரும் ஔவையாரும், கூத்தரும் குலோத்துங்க சோழனும், முடவரும் குருடருமான இரட்டைப் புலவர்களும் இன்னும் பலரும் பாடியிருக்கின்றனர்.

## இலக்கியம் பிறந்த பாடல்கள்

கூதிர் காலத்தில் பூந்தட்டில் இட்டு வைத்த பிச்சியரும்பு மணங் கமழ விரிதலைக்கண்டு பொழுதறிந்தனர் பழந் தமிழ் மக்கள். பொழுதறிதல் - அந்திக் காலமென்றறிதல், (நெடுநல்.39-41).

காலையில் தாமரை மலர்கிறது. மாலையில் மல்லிகை மலர்கிறது. இரவில் குமுதம் மலர்கிறது.

நெருஞ்சிப் பூ ஞாயிறு மண்டிலம் இயங்குந்தோறும் அதற்கிசை யத் திரும்பி அதனை நோக்கும் இயல்புடையது.

நீள் சுடர் நெறியை நோக்கு
நிரையிதழ் நெருஞ்சிப் பூப்போற்

[பெரிய ஞாயிறு போம் நெறியைப் பார்க்கும் நிரையிதழ்களை யுடைய நெருஞ்சி மலர்களைப்போல. சீவக. 461]

பூமரங்களைக் கொண்டு பொழுதறியும் திறன் நாட்டு மக்களி டம் பழங் காலந் தொட்டு இருந்து வருவதைப் பின்வரும் பாடல் களால் அறியலாம்.

பொழுது அடைஞ்சிருச்சே
பூமரமும் சாஞ்சிருச்சே
இன்னம் இரங்கலேயோ
எசமானே உங்கமனம்.

['பொழுதும் எறங்கிரிச்சு, பூமரமும் சாஞ்சிரிச்சு' என்றும் பாடம் உண்டு.]

வேறொரு வகையாலும் நாட்டு மக்கள் பொழுதறிந்து வந்தனர்.

தண்ணி கறுத்திரிச்சு
தவளைச்சத்தம் கேட்டிருச்சு
புள்ளை அழுதிருச்சு
புண்ணியரே வேலைவிடு

× × ×

ஆயன் ஒருவன் ஆய்ச்சி ஒருத்தியைக் கண்டு, காதல் கொண்டு அவளோடு பேசி, அவள் இசைவைப் பெற்றது (முல்லைக்கலி 10)

நின்றாய் நீ; சென்றீ: எமர் காண்பர்; நாளையும்
கன்றொடு சேறும் புலத்து

[இங்கு நின்றால் என் தாய் தந்தையர் பார்த்துவிடுவர், ஆகவே இங்கிருந்து சென்றுவிடு. இன்றே போல் நாளையும் கன்று களோடு மேய்புலத்திற்குச் செல்வேன்; ஆங்கு வருக.]

அதேபோல ஒரு யோசனையைப் பாமரப்பெண் ஒருத்தியும் அவள் காதலனும் பரிமாறிக் கொள்கிறார்கள்.

வேலி பிரிந்த தென்று
விற கொடிக்க நான்வாறேன்
கண்ணு பிரிந்த தென்று
கரையோரம் நீர்வருவீர்.

முல்லைக்கலி 16ம் பாடலும் இதே பொருளைக் கொண்டுள்ளது.

× × ×

பேரின்பத்தை விரும்பி நின்ற குலசேகர ஆழ்வார் தாம் ஏதே னும் ஒரு நல்வினையால் திருமால் வீற்றிருக்கும் திருவேங்கட மலையில்,

தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாகப் பிறக்கும் விதியுடையே னாவேனே

என்றும்,

அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே

என்றும் இன்னும் பலவும் சொல்லி வேண்டுகின்றார்.

சிற்றின்பத்தை விரும்பி நிற்கும் நாட்டு மகன் ஒருவன் தங்கு தடையின்றித் தன் காதலியைத் தனிமையிலும் நேரிலும் அண்மை யிலும் கண்டானந்திப்பதை விரும்புகிறான்.

மானா மதுரையிலே
மயிலாள்தலை முழுகையிலே
மீனாக வந்து நானும்
மிதக்கத் தவஞ் செய்யேனோ

என்கிறான். ஏதேனும் ஒரு நல்வினை தன் இச்சையைத் தீர்த்து வைக்கும் என்பது அவனது நம்பிக்கை.

நாட்டார் பாடல்களிலுள்ள உயர்ந்த கருத்துக்கள் செந்தமிழ் இலக்கியத்தில் சேர்க்கப்பட்டிருப்பது உலகறிந்த உண்மை.

## மட்டக்களப்புக் கவிகள்

இலங்கையின் தமிழ் மாகாணங்களில் முஸ்லீம் மக்கள் பெரும்பாலார் வாழும் இடங்கள் மட்டக்களப்பு, திருக்கோணமலை, மன்னூர்ப் பட்டினப் பகுதிகளாகும். இப் பிரதேசங்களில் உள்ள ஆடவர் நாவிலுங் கவி அரிவையர் நாவிலுங் கவி என்று சொல்லுதல் மிகையாகாது.

வயலில் உழுதுகொண்டு நிற்கிறுன் ஒருவன். உழவு முன்னேறவில்லை என்கிறுன் அங்கு வந்த முதலாளி.

மாடும் வயதாளி
 மாட்டுக்காரன் குமராளி
நானுமொரு நோயாளி - மாடு
 நடக்குதில்லை முதலாளி

என்கிறுன் உழுபவன்.

வாடிக்குச் செல்கிறுன் புருஷன். அவன் மறுநாட் காலையே தன் வீட்டுக்கு மீள்வான்.

வாடியில நிக்கும்
 வாழைகுலை போட்டிருந்தால்
காலையில் எழுந்து
 கையோட கொண்டுவாங்கோ.

என்கிறுள் அவனுடைய மனைவி அவனைக் கொஞ்சத் தூரம் புறப்பட்டுப் போகவிட்டு.

இப்படியே கவிகள் இப் பிரதேசங்களில் உருவாகின்றன. இவை யாவும் மட்டக்களப்புக் கவிகள் என்னும் பெயரினுல் வழங்கி வருகின்றன.

## செவிக்கினிய தனிக் கவிகள்

சொல் நயம் பொருள் நயம் சிறந்து, செவிக்கின்பம் பயக்கும் இலக்கியத் தரங் கொண்ட தனிக் கவிகள் பல மட்டக்களப்பில் வழங்கி வருகின்றன. இவற்றில் காமச் சுவையே அதிகாரப்பட்டு நிற்கும்.

வில்லில் தலைமுழுகி
 விரித்த கொண்டை தோளிலிட்டு
புல்லிலடி வைத்துப்போற
 புள்ளிமான் கண்டே நீங்க!

மூண்டாம் பிறையோ
  முகஞ் சந்திர பூரணமோ
தீண்டாத தெள்நிலவோ
  தேன்மொழியே உன்முகந்தான்.

திண்டால் இனிக்கும்
  சீனிரசம் போலிருக்கும்
கண்டால் பசிதீரும்
  கண்மணியே உன் சொக்கிரண்டும்

நாலு வயல் கடந்து
  நங்கணமே போறியளே
நற்பவளக் காலிலொரு
  நத்தை அறுத்திடாதோ!

கண்ணுன கண்மணியே!
  கனிந்த நறுங்பழமே!
பெண்ணுளே! என்னேடு
  பேசினல் முத்துதிர்மோ!

[வில்லு = குளம். கண்டு = கன்று. நத்தை = நத்தை ஓடு. மூத லாகு பெயர்]

ஸ்திரீ ராகம், புருஷ ராகம் இரண்டும் அடுத்தடுத்துத் தொனிப்பது உளநூலாருக்கு அருவிருந்தன்றே!

## ஒரே பொருள் பாடல்கள் பல

வறுமையால் ஒரு பெண் வயிற்று நசல்காரனுக்கு வாழ்க்கைப் படுகிருள். அவனைப் பராமரித்துக் கொள்வதை விட வேறு சுகம் ஒன்றையும் அவள் அறியாள். மேலும் தாங்கிக் கொள்ள முடியாது சலிப்புத் தட்டுகிறது. சோக உணர்ச்சி சொல்லோவியமாக வெளிவருகிறது.

சும்மா விருந்து
  சோறுழைத்துத் தின்னுமல்
வாழ்ந்தோம்கா உம்மாவொரு
  வயிற்றுநசல் காரனுக்கு

பத்து வருஷம்
  பாரக்கும ராயிருந்து
வாண்டங்கா ராத்தாவொரு
  வயிற்றுநசல் காரனுக்கு

ஒற்றைப் பட்டுச் சேலைக்கும்
ஒரு முழச் சட்டைக்கும்
வாண்டனடி உம்மாவொரு
வயிற்று நசல் காரனுக்கு

நாணற் பூப்போல
நரைத்த கிழவனுக்கு
வாண்டனடி உம்மா - என்ர
வயிற்றுக் கொடுமையாலே

வாழ்ந்த தெல்லாம் - என்ர
வயிற்றின் கொடுமையாலே
இருமல் தலைவலியாம்
என்ன சுகம் கிழவனிடம்

[ராத்தா — அக்கா.]

## இரு பொருட் கவிகள்

பன்றிப் பள்ளிலிருந்து சில பாகங்கள் 'வாய் மொழி இலக்கியம்' என்னும் நூலில் (பக்.51) தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு பாடல் வருமாறு.

மானிடவன் செய்த செய்கை (நெல்லு)
யாவருக்கும் பங்கதாகும்
வன்னிமையில் லாமல் நீங்கள்
தின்னுங்கோ மக்காள்.

இப் பாடலோடு தொடர்புடைய வேறு பாடல்கள் இரண்டினை இங்கே தருகின்றேன். இவை வெளிவராதன.

வெட்டிக் கட்டிச் சூடு வைத்தால்
எட்டிப் பார்க்க முடியாது
கெட்டித் தனமாக நின்று நீங்கள்
தின்னுங்கோ மக்காள்.

செய்தவர்க்குத் தெண்டமல்லால்
தின்பவர்க்கு தெண்டமில்லை
செல்லுமட்டும் நீர் செலுத்தித்
தின்னுங்கோ மக்காள்.

இது பன்றியின் கொள்கையாகும். மானுடனும் இதிலிருந்து ஓர் உண்மையைக் கற்றுக் கொண்டான்: அவ்வுண்மை உள்ளத்தில் உரம் பெற்று, உணர்ச்சி வசப்பட்டு, பாட்டாக அவன் நாவில் தவழ்கிறது.

கதிரும் ஒரு கதிரு
காவலுமோ பன்னிரண்டு
பன்னிரண்டு காவலுக்கும்
பன்றி தின்ன நாளுமில்லை

பன்றியின் கொள்கையையே மாடுகளும் பின்பற்றுவன. அதிலிருந்தும் மானிடன் கற்றுக் கொண்ட உண்மை அவன் மனத்தில் உரம் பெற்று, உணர்ச்சி வசப்பட்டு,

நடுச் சாம வேளையிலே
நாற்புறமும் காவல் தப்பி
வளர் பயிரை மேயவொரு
காளை வந்து போகிறது.

என்ற பாடல் உருவாகிறது.

மகளின் துரிதமான வளர்ச்சியும் அவளின் நடை உடை போக்கு வாக்கு முதலியனவும் மட்டக்களப்புப் பெண் ஒருத்திக்குத் தன் மகள் மேல் ஐயுறவை உண்டாக்கின. மகளைக் காவல் காத்துக் கொண்டு வீட்டிலிருந்தாள். எவ்வளவு நாட்கள் அப்படியிருக்க முடியும்! ஒருநாள் வெளியிற் சென்றாள். ''கதிரும் ஒரு கதிரு'' என்ற பாடல் காற்றில் மிதந்து வந்தது. இன்னுங் கொஞ்சத் தூரஞ் சென்றாள். ''நடுச்சாம வேளையிலே'' என்ற பாடல் எதிர்ப் புறத்திலிருந்து வந்தது. அதற்கு மேல் அவளால் செல்ல முடியவில்லை. வீடு திரும்பினாள்.

தன் வளவுக் கடப்படியில் இலுப்பையின் கீழ் தன் மகள் ஒரு வாலிபனுடன் கதைத்துக் கொண்டு நிற்கக் கண்டாள். தன்னைக் கண்டதும் மகள் கடப்பைக் கடந்து வளவுக்குள்ளும் வாலிபன் மறுபுறமும் போகக் கண்டாள். அவள் கோபம் உணர்ச்சி வசப்பட்டது.

கடப்பைக் கடந்து
காலெடுத்து வைத்தியெண்டால் - உன்
இடுப்பை ஒடித்து - வேலி
இலுப்பையின் கீழ் போட்டிடுவேன்.

என்றாள் மகளைப் பார்த்து. அதன் பின்பும் அவள் கோபம் தணிந்தபாடில்லை.

வாசல் கடந்து
வழிகண்டு போனியெண்டால்
வேசை மகளே - உன்னை
வெட்டிடுவே னிரண்டுதுண்டாய்

என்றாள்.

இத்தகைய அருஞ் செல்வங்கள் மறைந்து போகா வண்ணம் அவற்றைத் தேடி எடுத்துப் பிற் சந்ததியாருக்குத் தொகுத்து, வைப்பதும் உலகறிய இச்செல்வத்தை வெளிப்படுத்துவதும் எங்கள் கடன். பாடல்களை மட்டும் தொகுக்காது, பாடல்களில் பொதிந் துள்ள அரும் பெரும் கருத்துக்களையும் விளக்கிக் காட்டித் தொகுத் தல் வேண்டும்.

முதற்பாடல் மூன்றும் ஆங்கிலத்தில் Ballads என்னும் துறைப் பட்டு நிற்கும். இவற்றையும் நாட்டார் இலக்கியத்தில் கொள்வது மேனாட்டறிஞர் கொள்கை.

## மறை பொருட் கவிகள்

உட்பொருள் ஒன்று வைத்து, வெளிப் பொருள் வேறொன்று தோன்றக் கவிகள் பாடும் திறன் மட்டக்களப்பு மக்களுக்கு உண்டு. இதனை இறைச்சிப் பொருள் என்பர் அகப் பொருள் இலக்கியத்தில். பின்வருங் கவிகளைப் படித்துப் பாருங்கள்.

1. ஆயிரங் கொம்பன்
அதிலேயொரு ஏந்துகொம்பன்
ஏந்துகொம்ப னில்லாமல்
ஏற்குதில்லை என்மனது.

2. முத்துப் பதித்தகொம்பன்
முதலிமார்க் கேற்றகொம்பன்
தட்டிச் சொறிந்த கொம்பன் - அது
தலைகிளப்பிப் பார்க்குதில்லை.

3. சாம்பல்மொந்தன் குலைபோல
சமைஞ்சகொம்பன் நானிருக்க
ஏந்துகொம்பன் குழந்தையோடே - உங்களுக்கு
என்னவிருப்பம் வந்ததுகா

4. நிறைந்த குளத்திலே
நீர்ப்புலாப் பூத்ததுபோல்
சமைந்த குமரியிடம்
சங்காத்தம் ஆகாதோ

5. வாழையிலே குலையிருக்க
வாழ்மனையாள் சிறையிருக்க
சேனையிலே நானிருக்க - நீங்க
செப்பெடுக்க ஞாயமுண்டோ

6. பூத்த மரத்தடியில்
புளங்குவது நீதியல்ல — உங்களைக்
காத்த மரமிருக்கு - நீங்க
கனியருந்தச் சீமான்

விவாகம் முடித்த ஒருவன், மனைவி கர்ப்பிணியாக, காதற் பரத்தையை நாடுவதும், அவ்வளவுடன் நின்றுவிடாமல் ஒரு கன்னியின்மேல் கண்வைப்பதும், அவன் கெட்ட எண்ணங்களைக் கண்ட கன்னி தூரத்தே நிற்பதும், வயிற்றில் குழந்தையுடனிருக்கும் அவனது மனைவியை அவனுக்கு நினைவூட்டி, காதற்பரத்தை அவனைக் கடிந்துரைக்கும் கதையும் மேலே தந்துள்ள பாடல்களினூடே இழையோடுவதைக் காணலாம்.

மேலே தந்துள்ள இரண்டாம் பாடலின் பொருள்கொண்ட இன்னொரு பாடல் வருமாறு.

கட்டிக் கறந்தநாகு
காலணையத் தந்தநாகு
தட்டிச் சொறிந்தநாகு — அது
தலைநிமிர்ந்து பார்க்குதில்லை

[இரண்டாம் வரி, 'கணுவடிக்கு வந்த நாகு' என்றும் நாலாம் வரி 'தலையெடுத்துப் பார்க்குதில்லை' என்றும் பாட பேதங்கள் உண்டு.]

ஆறும் பாடலின் பொருள்கொண்ட ஒரு பாடல் மத்திய இந்தியாவில் வழங்கிவருகிறது. அதன் மொழிபெயர்ப்பு Folk - Songs of the Maikal Hills என்னும் ஆங்கில நூலில் (பக். 241) தரப்பட்டுள்ளது.

Bend it as you will
The cut bamboo
Why then seek favour
From another's love

## தூதுக் கவிகள்

தலைவி - தலைவன் ஒரு தூதுவன் மூலமாகத் தம் கருத்துக்களைத் தெரிவிக்கும் பொருட்டு அத் தூதுவனை விளிப்பதுபோற் பாடுவது தூது எனப்படும். இவ் வழக்குப் பண்டுதொட்டு இருந்துவருகின்றது. மனிதர்களேயன்றி வண்டு முதலிய அஃறிணை உயிர்களும், மேகம் போன்ற அஃறிணைப் பொருள்களும் தூதுக்குக்கொள்ளப்படுவதுமுண்டு.

மட்டக்களப்புக் கவிகளுள் தூதுக் கவிகள் பலவுள. அவற்றுட் சில வருமாறு:-

சொல்லிடுகா தோழே - அந்தத்
தோகைமயி லாளோடே
சூடுபோட்டு நெல்லுத்தூற்றிக் - கன
தொல்லையிலே நிக்கேனெண்டு

பள்ள வனமிருந்து
துள்ளிவரும் மானினமே
தெள்ளமுதாம் மச்சானுக்கு
எந்தன்துயர் கூறிவிடு

ஆகாசக் கொப்பில்
அறையறையாய்க் கூடுகட்டி
தங்கும் புருக்காள் - என்ர
தங்கவண்டைக் கண்டயளோ?

சோலைக் குயிலே
தோகைமயில் நங்கணமே
கூவும் புருவே - அவரைக்
கொண்டுவந்து சேர்த்திடுங்கோ

உயரப் பறக்கும்
ஒருகோடி நங்கணங்காள்
தாழப் பறவுங்கோ - என்ர
தன்மைகளைச் சொல்லியழ,

## ஓரடிக் கவிகள்

மட்டக்களப்புக் கவிகளுள்ளும், ஓரடிக் கவிகள் உள. ஆணும் ஆணும், ஆணும் பெண்ணும், பெண்ணும் பெண்ணும் பாடிக் கொள்கிறார்கள். அவற்றுள் சில வருமாறு:

ஆண்: கூட்டாளி நண்பா!
குரக்கன் என்ன விற்குதடா?

ஆண்: அல்லா அறிய நண்பா
ஆறு பணம் விற்குதடா.

சந்தைக்குப் போகிறவர் சந்தையால் வருபவரை வினவுகின்றார். இதன் கீழ் வருவன இன்னொரு சோடியின் வினவும் விடையும்.

பெண்: சந்திரமதியே, பெண்ணே!
சந்தையில் கறிதான் என்னே?

பெண்: சத்தியமாகச் சொன்னேன்
'சள்ளல் மீன்' குஞ்சுதானே.

[சந்தையில் கறி = சந்தையில் விற்பனைக்குள்ள மீன் வகை.]

ஆண்: கண்டுவம்மிக் கீழிருந்து
கண்கசக்கி ஏனழுதாய்?

பெண்: நெருக்கம் பொறுக்காமல்
நிண்டழுதேன் வண்டே.

[கடைசிவரி, நினைச்சழுதேன் மச்சானை என்றும் பாடமுண்டு. கண்டு வம்மி = ஒரு மரம்]

## நகைச் சுவை

நகைச் சுவைக் கவிகள் சிலவற்றைச் சந்தர்ப்பங்களுடன் ஈண் டெடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

மச்சானை வட்டமிடுகிறான் அவளுடைய மச்சான். இசைவின்றித் தூர நிற்கிறாள் மச்சாள். அவசரப்பட்டு ஓரிரவு அவன் கதவில் அடித்துவிட்டான். அவர்களுக்கிடையே மறுநாள் நடந்த உரை யாடல் இது.

மச்சாள்: ஆளை மதிக்கனென்றோ
அடியறிய மாட்டனென்றோ
இரவு சரிசாமம்
என்கதவில் நீயடித்தாய்!

மச்சான்: காலால் நடந்து – உன்ர
கதவடியில் வந்து நின்று
மண்ணால் எறிந்தேன் – உன்ர
மனசறிய வேணுமென்று.

மச்சாள்: கல்லால் எறிந்தால்
கலகம்வரு மென்றெண்ணி
மண்ணால் எறிந்துமச்சான்
மதனிமுறை கொண்டாடினதோ!

x x x x

குறியிடத்துக்கு வந்த காதலன் பொறுமை யிழந்து கூரையை உருவி ஆளரவஞ் செய்தான். தாய் உறங்கிவிட்டதால் மகள் அன்று தப்பினாள்.

காதலி: கோடியில் வந்துநின்று
கொக்காட்டம் கொள்ளாதேகா
ஊடு நிறைந்தசனம் – எங்க
உம்மாவுந் திண்ணையிலே

என்று காதலனை மறுநாள் கடிந்தாள். மீண்டும் ஓரிரவு வீட்டுக் கூரையை அவன் சரசரக்கச் செய்தான். அன்று தாய் உறங்க வில்லை. தானாகவே மகள் விளக்கங் கொடுக்கிறாள்.

கோடியாலே வந்தமாடு
கூரையை உருவுதென்று
ஏசாதேகா உம்மா – நம்மட
எருதுவந்து போகுதாக்கும்

x x x x

மச்சான் ஓர் உருண்டு திரண்ட உருப்படி. மச்சாள் வீட்டை நோக்கி வருகின்றான் அவன். மச்சானின் உடையும் நடையும், உருவமும் மச்சாளின் கவனத்தை ஈர்க்கிறது.

வெள்ளி வெலுட்டும்
விரல்நிறைய மோதிரமும்
எங்கும் பொழுபொழுப்பு
எங்கமச்சான் வாறசெப்பம்

சாரம் சலசலக்க
சந்தனப்பூ மினுமினுக்க
வாறும் பளபளக்க – மச்சான்
வாறசெப்பம் பார்க்கவொண்ணு

வாழைப் பழண்டி
வங்குசண்டி எங்கமச்சான்
ஈர்கொல்லி போலஅவன்
இனிப்பெருக்க மாட்டாண்டி

என்கிறாள் தோழியைப் பார்த்து. மச்சான் அண்மையில் வந்ததும்,

சாறன் உடுத்துச்
சரியான லேஞ்சிகட்டி
வேலிக்குள் ஒதுங்குமச்சான்
வேசிகளின் கண்படாமல்.

என்று அவனைப் பரிகசித்தாள்.

X X X X

காவலுக்குத் தான் போகும் நேரங்களில் வீட்டில் தன் மனைவி சோரம் போகிறாள் என ஐயுற்றான் கணவன். சோர நாயகனுக் காக விசேஷ உணவு வீட்டில் தயாரிக்கப்படுவதையும் கண்டுவிட் டான்.

கணவன்: குஞ்சுமீன் தியல்கண்டேன்
குறவைமீன் புளியாணம்
கண்டுவந்தேன் பெண்ணே
காவலுக்கு நான் போகேன்

மனைவி: ஆலடியில் வரவை
அதற்கடுத்த நீள்வரவை
காவலுக்குப் போகாட்டிக்
கதிர்களவு போகுமல்லோ

கணவன்: கதிர்களவு போனல்
கடன்வாங்கி நான்தருவேன்
முலேகளவு போகாமல் — நீ
மூலேயிலே பாய்போடு.

## வீரச் சுவை

காதலன் காதலிக்கிடையே பிணக்கு ஏற்படுகிறது. அவனை மணக்க அவள் மறுக்கிருள். அதனை ஏற்பாளு ஆண் மகன்.

சிவன் கிடந்து – இந்தச்
சீமையிலே நானிருந்தால் - என்
காயங் கிடக்குமென்ருல் – உன்னைக்
கண்ணிகுத்தி நான்பிடிப்பேன்

என்கிருன் அவன்.

இப் பொருள் கொண்ட பாடலொன்று மத்திய இந்தியாவில் வழங்கி வருகிறது. அதன் மொழிபெயர்ப்பு Songs of the Forest என்னும் நூலில் (பக். 128) தரப்பட்டுள்ளது.

You may go anywhere,
You may wander along the roads of all the world
But I will find you, O my love.

X X X X

காதலன் காதகனுனன். அத்துடன் தன்மீது குற்றமில்லையென்றுஞ் சாதித்தான். அவள் கோபம் எல்லே கடந்தது.

கோட்டுக்குப் போனலும்
குற்றந்தெண்டம் வந்தாலும்
அரும்புழுந்த செருப்பாலே
அடித்திடுவேன் சொத்தையிலே

என்ருள் அவள். அவ்விடம் விட்டகன்ருன் அவன்.

## ஆர்வ மொழியின் அடுக்கு

ஆர்வ மொழிகளைப் பாமரக் கவிஞர் அடுக்கித் தரும் அழகை மட்டக்களப்புக் கவிகளில் படித்து மகிழலாம். இதோ அவற்றுட் சில:

சோலைக் கிளியாரே
சுந்தரஞ்சேர் மச்சாளே
வாலைக் குயிலாரே
வந்திட்டேன் உன்னருகே

காட்டுக் கிளியே
கதைபழகும் நங்கணமே
சோட்டுக் கிளியே — நீ
சொல்மதனி சம்மதத்தை

அன்புக்(கு) அணிகலமே
அழகொழுகுஞ் சித்திரமே
கற்புக் களஞ்சியமே — உன்னைக்
காணவென்று காத்திருந்தேன்.

பாமர மக்கள் உருவக அணியை எளிதாகக் கையாளும் விதத்தையும் இங்கே காணலாம்.

## அலங்கரர நயம்

ஆண் பிள்ளையைப் பறவையாக உருவகம் பண்ணினவள் தன்னையும் பறவையாக உருவகம் பண்ணியிருக்கின்ற அலங்கார நயத்தைப் பின்வருங் கவியில் கண்டுகொள்ளுங்கள்.

மாடப் புருவே
மலைநாட்டு நங்கணமே
கூடப் பறப்பேன் — உங்க
கூட்டாளிமார் செப்பமில்லே.

இது சிறந்த நாட்டார் பாடல்களில் வரும் வித்துவத் தன்மை: இஃது இயற்கைப் புலமை. "நீ தகாதவர்களோடு கொண்ட உறவை விட்டுவிடு. அப்போது நீ நாடுவிட்டு நாடு செல்ல விரும்பினாலும் நான் உனக்கு உறுதுணையாக வருவேன்" என்று பறவை இலக்கணம் வழுவாது அவள் சொல்லும் முறை சுவை பயக்கும். இது சிலேடை அணி.

## உவமை நயம்

பண்டைய இலக்கியப் பாடல்களோடு ஒப்பிட்டுப் பொருள் காணின் பின்வரும் கவியின் நயம் விரிவுறும்.

நடையழகி துடையழகி
நளினசித்திர வாயழகி
இடையழகி கதீஜா — ஒரு
இன்பமுத்தந் தாகிளியே!

நடை நயத்திற்குத் தனி மதிப்புண்டு என்பது யாவரும் அறிந்ததே. நடை கால்களின் தொழில். கால்களிலிருந்து 'துடை'யின் தரத்தை அனுமானிக்கின்முன். வாழைத்தண்டைத் தலைகீழாக்கினால் எப்படியிருக்கும் வடிவத்தில்? அதுபோல. இனி, நளினம்= தாமரை. சித்திரத்திற் கண்ட தாமரையின் அழகை ஒத்திருப்பது இவள் அதரங்களின் அழகு. இந்தியர் கொள்கை, ஓவியமானது அது சுட்டும் பொருளிலும் சிறந்தது, என்பது. மேனாட்டிலும் இவ்விலக்கணம் ஒரோ இடத்தில் கொள்ளப்படுகின்றது. ஆகையால் நாம் உலகில் காணும் தாமரையிலும் அழகானது சித்திரத்தில் காணும் தாமரை. இதனை ''ஓவியன் உள்ளத்து உள்ளியது வியப்போன்'' (மணிமேகலை 5/7) என்னும் அடியால் அறிக. மேனாட்டார் சித்திரப் பொருளை முன்னிட்டுக்கொண்டு சித்திரம் வரைவராகையால் அவர்க்குச் சித்திரத்திலும் மிக்கது இயற்கைப் பொருள் என்பது பெரும்பான்மைக் கொள்கை.

## காதற் கனவு வேம்பாதல்

மதம் பிடித்த யானைக்குச் சொந்தமான தென்னவன் கனவில் ஒரு மங்கையை நாடினான். அவளும் தன் படுக்கையில் அவனுக்குக் கொஞ்சம் இடம் கொடுத்தாள். பக்கத்திலே படுத்துக் கொண்டு நலம் பாராட்டி அவளைத் தழுவினான். அவள் மதிமயங்கிக் கிடந்தாள். தாமும் அவனைத் தழுவ நினைத்துத் தன் செங்காந்தள் அரும்பையொத்த மெல்லிய விரல்களால் தடவிப் பார்த்தாள். ஆளில்லை. திடுக்கிட்டு எழுந்தாள். அந்தக் கனவு நிலையிலேயே திரும்பவும் படுக்கையைத் தடவினாள், இக் கதை இதன் கீழ் வரும் முத்தொள்ளாயிரம் 74ம் பாடலில் மிளிர்கின்றது.

களியானைத் தென்னன் கனவில் வந்(து) என்னை
அளியான் அளிப்பானே போன்றான் — தெளியாதேன்
செங்காந்தள் மெல்விரலால் சேக்கை தடவந்தேன்
என் காண்பேன் என் அலால் யான்.

வரை பொருளின் பொருட்டுத் தலைவன் பிரிந்து விட்டான். அவன் தன் உடம்புடன் அணைதலைப் பொருந்திய மெய்போலும் தன்மையையுடைய பொய்யாகிய கனவு தலைவிக்கு மயக்கத்தை உண்டாக்கிற்று. அவள் துயிலுணர்ந்து தலைவனென எண்ணிப் படுக்கையைத் தடவி ஏமாந்தாள். இக்கதை குறுந்தொகை 30ம் பாடலில் இடம் பெற்றுள்ளது.

மட்டக்களப்புக் கவிகளுள் இவ் இலக்கியப் பொருள் கொண்ட பாடல்கள் பலவுள. அவற்றுள் மூன்று இவை,

பாயை விரிச்சுப்
    படுக்கையிலே கொண்டுழுந்து
வீண்பாய் துருவி — நான்
    வீண்முழுக்கு ஏன்முழுக!

கரும்பை நினைத்துமச்சான்
    கண்ட கனவாலே
வெறும்பாய் திருவி — நான்
    வேறுநினை வானேனே.

கரும்பே ஓரிரவு
    கண்டு கனவிலும்மை
வெறும்பா யினைத்தடவி
    வீணில்நான் நொந்தழுதேன்.

மத்திய இந்தியாவில் வழங்கி வரும் இப் பொருள் கொண்ட பாடலொன்று Folk - Songs of Chhattisgarh என்னும் நூலில் மொழி பெயர்த்துத் தரப்பட்டுள்ளது.

These meetings in dreams,
How sad they are!
When waking up startled
One gropes about --
And there is no contact to the hand.

இங்கே எடுத்துக் காட்டியுள்ள இலக்கியப் பாடல்கள் தலைவி தோழிக்குச் சொல் கூற்றுக்களாக அமைந்திருக்கின்றன. நாட்டார் இலக்கியத்தில் காதலன் காதலியோ கணவன் மனைவியோ தோழியின் துணையை நாடுவதில்லை. எனவே அவர்கள் ஒருவருக்கொருவர் சொல்வதாகவோ, தம் நெஞ்சோடு புலம்பலாகவோ நாட்டார் பாடல்கள் அமைந்திருப்பது காண்க.

## முடிவுரை

இந்தியாவிலும் இலங்கையிலும் வழங்கி வரும் நாட்டார் பாடல்களை மூன்று பிரிவாகப் பிரிக்கலாம்.

கல்வியறிவில்லாப் பாமர மக்களாற் பாடப்பட்டு புலவன் எவனும் திருத்தப்படாமல், வாய்மொழியாகவே வருவன ஒரு பிரிவு. இவை உலகில் அரியவை.

அடுத்த இனப் பாடல்கள் புலவரால் இயற்றப்பட்டு பொது மக்களிடையே பரவியன. இந்த வகையில் உள்ளவை பள்ளுப் பாடல்கள், வசந்தன் கவிகள், எண்ணெய்ச் சிந்து முதலியன.

மூன்றும் வகையைச் சார்ந்தன ஆதியில் பொதுமக்களால் பாடப்பட்டு, வாய்மொழியாக வந்தவற்றை, பெரும் புலவர்கள் சில மாற்றஞ் செய்து தம்முடைய நூல்களில் ஆக்கிக் கொண்டவையாகும். சங்க இலக்கியம், சங்க மருவிய இலக்கியம், திருவாசகம் அனைத்திலும் இவற்றுக்கு உதாரணம் உண்டு.

நாட்டார் பாடல்களை நாம் திருத்திக் கொள்ளலாகாது. பிரதி பாடங்கள் பெற்றுத் திருத்தங்கள் செய்து கொள்ளல் வேண்டும்.

நாட்டார் பாடல்களைத் தொகுப்பது இலேசான காரியமன்று. தொகுப்பவர்கள் நாட்டுப்புறச் சூழலில் வசித்து, நாட்டு மக்களுடன் கலந்து உறவாடி, அவர்கள் பேச்சு வார்த்தைகள், பழக்க வழக்கங்களை நன்கு தெரிந்து கொள்ளல் வேண்டும்.

